உ

திருச்சிற்றம்பலம்.

கோடீசுவரரென்னும் பேருடைய

கொட்டையூர்

சிவக்கொழுந்துதேசிகர்

பாடிய

# கோடீச்சுரக்கோவை.

(*)

இஃது,

சிதம்பரம்

கருணானந்தசுவாமிகளால்

பார்வையிடப்பட்டு

(*)

சிந்தாத்திரிப்பேட்டை

நாராயணசாமிமுதலியார்

அண்டுஸன் அவர்களால்

தமது

பிரபாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது

1895௵





கணபதிதுணை.

# கோடீச்சுரக்கோவை.

காப்பு.

கோடீச்சுரனுதவுகோடிவிநாயகவிக் ....................... *
கோடிச்சுரக்கோவைகூறுவிப்பாய்-நாடிவந்து ................ *
வஞ்சகமாதிமருவுமெளியேன்வலிய ....................... *
நெஞ்சகத்தேநீயொருசார்நின்று ........................... *

காட்சி.

சீர்கொண்டதாமரைப்போதைந்திரண்[illegible]கைநல்
லேர்கொண்டநீலமிரண்டோர்குமுதமிவ[illegible]தனை
னீர்கொண்டவேணியர்கோடீச்சுரேசர்நெடுவரைமேற்
கார்கொண்டகாவினிடையிலோராவியங்கண்ணுற்றதே, (௧)

இடையில்-நடுவில், இடை[illegible]த. ஆவி-உயிர், தடாகம்.

ஐயம்,

பாரோவலாரியின்பாருல[illegible]பார்வையன்ன
வூரோவிதிதன்பதியோமதியோடொளிரும்விண்ணிற்
றேரோதைசூழ்தருகோடீச்சுர[illegible]த்தர்தென்சிலம்பி
னேரோர்வடிவெடுத்தன்ன[illegible]டலங்கிடமே. (௨)

மதியோடொளிரும்விண்ணில்-மதியொடுவிளங்குமின்றவின்போல்

தெளிதல்.

கடியேறுகொன்றையர்கோடீச்சுரவெற்பிற்கண்டதொரு
கொடியேயிதனடிக்கொண்டதுபூமுகங்கொண்டதுவேர்
முடியேறியவண்டுநோக்கியையுறன்முன்னுமிழ்க்கப்
படியேயிதனிலையென்றுநெஞ்சேயிவைபன்னிடுமே, (௩)

பூ-இலம்,மலர்.வேர்,வேர்,வேர்வு. ஏறிய-ஏறின.படி-பூமி,தன்மை,

குறிப்பறிதல்.

பாலார்மொழியங்கர்கோடீச்சுரவெற்பின்பாலுறுநா
மாலாயினுமங்கமால்சோர்ந்துமுன்பின்மகிழ்வுபெற

பேசாமொழிதன்னுள்விடத்தோடமிர்தம்விளைந்தெனக்கு
நூலாமிடையினள்வேல்விழித்தோன்றியநோக்கங்களே. (௪)

இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

கனமுந்துறுகண்டர்கோடீச்சுரவெற்பிற்கண்டுபின்
னினமுந்துவளிடையாளின்பநல்குநம்பின்னைமெல்லா
மனமுந்துரைக்கின்மனமேவருதிவளாருமிக்க
தனமுந்தையையுமுள்ளாரில்லையென்பர்கொல்சார்ந்தவர்க்கே. (௫)

நல்கும்-நல்குவள். மன-பொருந்த.

இரந்துபின்னிலைநிற்றல்.

சேவார்கொடியினர்கோடீச்சுரேசர்சிலம்பிலென்மெய்ப்
பூவாளிமைத்தபுண்ணின்கணின்கண்ணெனுமமுமருவு
மேவாவநீயுமேவிப்பாராமுகமேவியிங்ஙன்
பாவாய்வண்பாவாய்கிளர்போலநிற்றல்பண்பாவுனக்கே. (௬)

முன்னிலையாக்கல்.

நாட்டங்கொள்பாலத்தர்கோடீச்சுரமன்னநன்னுதலாய்
கூட்டங்கொள்பாங்கியர்தம்மைவிட்டீண்டுக்குறுகிமதன்
வேட்டஞ்செயுமிடத்தேதனிநின்றவென்மேனமையொடு
தோட்டங்கொள்காவலர்க்காவலுற்றேறுவிதுசொல்லுகவே. (௭)

தோட்டங்கொள் காவலர்க்கு இசமுறுகுடையசோலைமலருக்கு.

வண்டோச்சிமருங்கணைதல்.

ஏழைமுரித்தவர்கோடீச்சுரநித்தர்வெற்பிலிந்த
வேழைமயிடத்துப்பலிதம்பாடியிளைத்திவடன்
கூழைவிரும்பியுறைவண்டுகாள்கணங்கொண்டுசென்று
குழைமக்காவலர்நல்கழுதார்ந்துசுகம்பெறவே. (௮)

ஏழை-ஏழை,மடந்தை-கூழை கூழினை,கூந்தல்.

காவலர்-அரசர்,சோலைமலர்.

இதுவும் வண்டோச்சிமருங்கணைதல்.

விடையுறுகேதனர்கோடீச்சுரவெற்பின்மேவுமன்ன
நடையினளுங்கனையென்கண்ணெணைமுன்னவின்றிடுதல்
புடையுறுகானறிவேன்வண்டர்நீவிரிப்போதிவட
னிடையைமுறிக்கத்தலைப்பட்டிருக்கின்றிரன்னிதுவே. (௯)

வண்டர் வண்டுகள்-தலைப்படல் சென்னியிற்பட்டிருத்தல், தொடங்கல்




மெய்தொட்டுப்பயிறல்,

நெய்ப்பட்டசூலத்தர்கோடீச்சுரவெற்பினிற்சா[illegible]
மைப்பட்டமாரனெய்தாலுமெய்தானரங்கையல்[illegible]ய்யாங்
கைப்பட்டமாகனமாதனமீங்குநங்கைப்பட்டதா[illegible]
மெய்ப்பட்டிடுதனைப்பெற்றூர்க்கெவ்வின்பமுமேவு[illegible] (௰)

பொய்பாராட்டல்

மெய்யன்பருக்கருள்கோடீச்சுரசித்தர்வெற்பணங்கே
பொய்யன்றிவைநின்னிடைக்கிணையாமெனப்போந்துசிலர்
கையினடிபட்டரற்றுந்துடியகைக்கண்டுவெம்போர்
செய்யுங்கணை மதன்கண்மறைவாகித்திரிந்திடுமே. (௰க)

இடம்பெற்றுத்தழாஅல்.

படந்திகழ்பூண்புனைகோடீச்சுரவள்ளல்பைம்பொன்வெற்பின்
மடந்தைநற்பொன்னனுநீயுங்கண்சோலைவளநிழலுந்
தடம்பெறுமாரன்கணையுமிங்கேய்ந்திடச்சார்ந்தனன்யா
னிடம்பொருளேவலொல்லாமுளவெனக்கென்குறையே, (௰௨)

ஏவலர்-ஏவலாளர், அம்பாகியமலர்.

இதுவுமிடம்பெற்றுத்தழாஅல்.

தக்கோர்புகழ்சண்பைக்கோடீச்சுரநம்பர்தம்மகனூர்க்
கக்கோலக்காவிற்றம்பொற்றாளந்தாமீந்தடிமையினேற்
கிக்கோலக்காவிலுன்பொற்றாணீநல்கிடவரிகண்
மிக்கோதைசெய்குழன்மாதேயின்றுன்னைவிடுத்தனரே. (௰௩)

வழிபாடுமறுத்கல்-

வலிவுறுசூற்படைக்கோடீச்சுரேசர்மணிவரைமேற்
பொலிவுறுதோழியர்பாங்கியராத்தனிப்போந்தின்று
மெலிவுறுமென்றனைக்கரத்தருள்சாந்தமிசைக்கொடுதண்
மலிவுறுபோதமுடனளிவாய்ந்துறைமாதவியே. (௰௪)

பாங்கியராக-பக்கத்திற்சென்றவராக. சாந்தம்-சந்தனமரம்,பொறுமை
போதம்-ஞானம்,பூவழகு. அளி-கருணை, வண்டு-
மாதவி-குருக்கத்தி, தவத்தினள்.

இடையூறுகிளத்தல்.

கொந்தார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்குவட்டில்வள
ரந்தாமரைத்திருவேநீயெனக்கெவ்வளவுதனைந்

தந்தாலுமாங்கதொருபெரிதன்றுநரிலமையும்
பைந்தாட்குவளைநிகருன்விழியருட்பார்வையதே. (௧௫)

இதுவுமிடையூறுகிளத்தல்.

துண்டமதிபுனைகோடீச்சுரேசர்சுடர்க்கிரிவாழ்
பண்டருந்தீஞ்சொன்மயிலனையாயிந்தப்பாரிடத்தே
தண்டரும்போதெங்கெனத்தேடிவண்டுகள்சார்தலுண்டு
வண்டிடந்தேடிநின்கைப்போதுசார்ந்ததுமாவியப்பே. (௧௬)

நீடுநினைந்திரங்கல்.

வில்லார்சலவிற்கோடீச்சுரேசர்தம்வெற்பினிந்த
நல்லாள்பதங்கைமுகம்வாய்கடக்கொணயனமிவை
யெல்லாமினியமலராவியற்றியிதையமொன்றுங்
கல்லாலகுத்ததென்னோவிதியாகியகைதவனே. (௧௭)

மறுத்தெதிர்கோடல்.

நடநவிலீசர்தென்கோடீச்சுரவெற்பினுமினைய
வடன்மதன்*றன்னிடமேய்ந்திடப்போம்விழைவாவதனை
விடலருநாண்கொண்டகத்தகைத்தாலுமெலச்செலுமாற்
கடல்புரண்டாமற்றதனைத்தடுக்குங்கரையில்லையே, (௧௮)

*ஏய்ந்திட-பொருந்திட, மேய்ந்திட.விழைவாவதனை-ஆசை
யை,ஆசையாகிய பகவை.நாண்-கயிறு,வெட்கம்.அகம்-மனம்.வீடு

வறிதுநகைதோற்றல்.

சகமுழுதும்புகழ்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பிற்
ககமுதவுந்தளிர்க்காவிடத்திம்மணிக்கட்கரும்பின்
முகமதிற்றோன்றியமுத்தநகைக்கயன்முத்தநகை
நிகரலவேயொன்றுரைத்தாற்பழிப்பாகிழதற்கே (௧௯)

முறுவற்குறிப்புணர்தல்.

வகைபூக்கசிருடைக்கோடீச்சுரசித்தர்மால்வரைப்பாற்
றொகைபூக்கவேர்கொண்டளிகொண்டுநீடுசகம்பயிலுந்
தகைபூத்தகாவில்வளரிம்முலைக்கொடிதன்னிடத்தோர்
நகைபூத்ததின்னதிலோர்மணந்தோன்றிடுநந்தமக்கே. (௨௰)

பூக்கவேர்-வேர்,ஏர்.அளிவண்டு,அன்பு முலைக்கொடி-முலையுடையகொ
டி,முல்லைக்கொடி.நகை - அரும்பு, முறுவல்.மணம் - வாசம், புணர்ச்சி.

முயங்குதலுறுத்தல்.

செல்வங்கிளரெழிற்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பின்
வில்லங்கெடுத்தெதிர்வேள்படைசூழ்வரமேவியிங்குச்
சொல்லங்கமுற்றணியாரின்னகாரிகைதுன்னுரங்கொள்
வல்லங்கைகொணடனங்கூடல்பெற்றேமுண்மகிழ்வரவே. (உக)

காரிகை-அழகு,பெண்.உரம்-மார்பு,வலி.வல்லம்-ஒருபட்டணம்,வல்-சூதாடுகருவி.கூடல்-மதுரை,புணர்வு.

புணர்ச்சியின்மகிழ்தல்,

மானேயிக்காவேயர் தடநீகமலமலர்மலர்வண்
டேனேவளருங்கினபேரின்பம் வந்துனேச்சேர்ந்ததுற்ற
நானேயத்தேனேயுணவண்டுகணடாய்நன்னதியுடனே
வானோர்மதியணிகோடீச்சுரசித்தர்மால்வரைக்கே. (உஉ)

புகழ்தல்.

வெளிதருநீற்றரன்கோடீச்சுரவண்ணல்வெற்பின்வளர்
குளிருமைக்கூந்தலுன்கணனேக்கிமீன் பயங்கொண்டலையு
மொளியுறுமின்னுன்னிடைநோக்கிவானிலொளித்திருக்குங்
களியுறுமன்னம்பறந்திடுநின்னடைகாண்பொழுதே. (உங)

ஏற்புறவணிதல்.

சொல்லணிநீடுபொருளணிமேற்பலசூழிலற்றட்
சில்லணியொன்றினுன்றேய்ந்ததைவேறுதெரிந்துழலே
வல்லணியீதினுலாவுறுகோவையனைந்திடுகே
னல்லணிகண்டத்தர்கோடீச்சுரமன்னவாரணங்கே, (உச)

அணிந்துழிநாணிய துணர்ந்துதெளிவித்தல்.

பணிபெறுபூணினர்கோடீச்சுரவெற்பின்பான்மணஞ்செய்
கணிபெறுசோலையின்மாதேயுலாவுன்றன்கண்ணிலங்கு
மணிபெறுநன்மையுறவீண்டெழுதினன்மன்னிமுன்போ
லணிபெறவோதிமுடித்தேனிதிலொன்றுமையமின்றே, (உரு)

பெருநயப்புரைத்தல்.

பங்கமுறுதிரும்போதுமலர்ந்துபனியினெடு
திங்கட்கெம் யாதுமுண்மேல்வதியாதுதிலகமுற்றிம்
மங்கையெழின் முகம்போலோர்நளினமலர்வண்டுகா
ளெங்குளதோதுமின் கோடீச்சுரேசரிமயத்திலே, (உசு)

தெய்வத்திறம்பேசல்.

மேருமுடியிருப்போருமதனடிமேவினரு
நேருறநோக்கிமகிழ்ந்திடவேலன்னநீள்விழியாய்
வாருறுமேவணியர்கோடீச்சுரேசர்வளைத்ததெனச்
சேருறச்செய்ததுநம்மைமுன்னூழின்றிறமதுவே. (௨௭)

பிரியேனென்றல்.

மறியாரிடத்தினர்கோடீச்சுரேசர்மலரடிசெங்
நெறியாலடைந்தவர்நீங்குவரோதுடிநேரிடையாய்
வறியார்மனைப்பொன்மனமுறுபோன்மருவுனைவைத்தகலற்
கறியாவனலன்னினும் வேறென்னரும்பொருளே. (௨௮)

பிரிந்துவருகென்றல்,

தூவென்றகுலத்தர்கோடீச்சுரவெற்பிற்குழனேநீ
போவென்றுரைக்கினும்போகேனெடிவரைப்போதுசெலற்
கேவென்றகண்ணியுளதொன்றிரேணக்கிருந்திடினும்
வாவென்றுகைக்கொடுவந்திடுமீங்கென்மனம்விரைந்தே. (௨௯)

இடமணித்தென்றல்.

சங்கரரங்கணர்கோடீச்சுரமன்னதாழ்குழலா
யுங்கள்புனத்திலுலாவுங்கிளிகளுமொணமயிலு
மெங்கணாசர்ப்பளிங்கார்சுவர்க்கோன்மலையென்றுமதிற்
றங்குறுஞ்சித்திரசித்திரமீதெனச்சாற்றுவரே. (௩௰)

தெளிவு,

சிங்கத்துரிபுனைகோடீச்சுரநிக்காதென்மதுரை
தங்கத்தமிழ்ச்சங்கத்தார் சொற்றவறினுஞ்சார்ந்துநந்தஞ்
சங்கத்திருந்துதமிழாய்ந்தவர்சொற்றவறுவரோ
விங்கிற்றையேவருவார்மனமேதெளிவின்னதுவே, (௩௧)

சங்கம் புணர்ச்சி, தமிழாய்ந்தவர்-இன்பமுணர்ந்தவர்.

செல்லுங்கிழத்திசெலவுகண்டுளத்தொடுவசொல்லல்

மின்வாசடையினர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மதன்
றன்வார்சிலையமிர்தமின்சாபமுந்தம்முடியுங்
கொன்வார்கணைகளும்வெம்போரதனிடைக்கொண்டுனையும்
பின்வாவென்றேகிடல்பார்மனமேயொருபெண்ணுடனே. (௩௨)

பாகனொடுசொல்லல்.

வின்மதன்றன்னைவெல்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்துந்
தன்மனமென்கண்வைத்தென்மனந்தான்கொண்டுதங்கித்தங்கி
முன்மதிராணீர்த்திடப்பின்பயந்தள்ள்முத்தநகை
மென்மருங்கோர்மின்செலல்பார்வலவவியன்பொழிற்கே. (௧௩)

ஆயவெள்ளம்வழிபடக்கண்டிதுமாயமோவென்றல்.

அண்டர்தம்மாதர்நடுவிந்திராணியினுப்பத்துறாஉம்
வண்டிருமாதிவட்கோடீச்சுரநித்தர்மால்வரையிற்
கண்டிருப்போமங்கொருகாற்புணரக்கருத்தினிச்சை
கொண்டிருப்போமன்றிக்கூடியிரோமுன்குறித்திடினே. (௧௪)

வாயில்பெற்றுய்தல்.

நஞ்சிற்பொலிகண்டர்கோடீச்சரவெற்பினண்ணுமிந்த
வஞ்சிக்கொடிதன்மலர்முகமேவியவண்டுசென்றப்
பஞ்சித்தளிரடிப்பூங்கொம்பர்மீதெதிர்பாய்தலெண்ணின்
விஞ்சிக்கொடிக்கந்தக்கொம்பர்பற்றாமென்றுமேற்சொல்வதே. (௧௫)

விஞ்சிக்கொடி-பெருமையுடையவிந்தக்கொடிக்கு-பற்று-ஆதாரம்

பண்புபாராட்டல்.

கலையொன்றுவேணியர்கோடீச்சுரேசர்கயிலையென்னு
மலைமுன்விளர்த்ததுமேருவுஞ்சென்னிவணங்கிநின்ற
தலையுற்றதொன்றன்றியாவுங்குறைபட்டவாமெனினிம்
முலைநகையாண்முலைக்கொப்பென்றெதனைமொழிவதுவே. (௧௬)

பயந்தோர்ப்பழிச்சல்

பந்தாடுமைபங்கர்கோடீச்சுரநித்தர்பைம்பொன்வெற்பின்
வந்தாகவஞ்செயும்வேள்வெங்கணைகளைமாற்றியென்றன்
சிந்தாகுலந்தீர்த்தினிதாண்டருளியதேமொழியைத்
தந்தார்கண்மாமனுமாமியுமாகுகதாரணிக்கே. (௧௭)

ஆகவம்-போர். மாமன்-திருவினுபகன். மாமி- திருவினுஞ்சிறந்தவள் (மீ குறுகியது.)

கண்படைபெறாதுகங்குனோதல்.

நதியுறுவார்சடைக்கோடீச்சுரேசர்நளிர்வரைவான்
மதியென்மதியைமயக்கும்வண்டார்மதன்வண்டலைக்கும்

பொதியமலேயத்தனிக்கான் மலேயுமபுகலுமினிக்
கதிபிரவெல்லேகண்டெல்லேயெப்போதிங்குக்காண்பதுவே. (௩அ)

தந்ததெய்வந்தருமெனச்சேறல்.

வெங்காககங்கணர்கோடீச்சுரேசர்வியன்சிலம்பிற்
செங்காண்மலர்மேற்றிருவனையாளேமுன்சேர்த்ததெய்வ
மிங்காளுஞ்சேர்த்திடுமீதல்கற்றேடுமொன்றுமீவர்கண்டாய்
சொன்றெலழுநெஞ்சமேசெல்குவோமந்தச்சூழ்பொழிற்கே. (௩௯)

முந்துறக்காண்டல்.

விழியொருமூன்றுடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பின்மத
னழகெனும்வெள்ளத்தகச்செங்கையாசையர்தூரிகைதோய்த்
தெழுதியவோவியமீதென்னவோர்மங்கையின்னுருவாய்
நிழல்செயிக்காவினங்கற்றவப்பேறெதிர்நிற்கின்றதே. (௪0)

முயங்கல்.

விடைபட்டகேதனர்கோடீச்சுரநம்பர்வெற்பின்மலர்த்
தொடைபட்டகோதையிவள்வாயமிர்தச்சுவையினுக்குப்
படைபட்டவேலேயமுதொத்திடாதுபகருமது
கடைபட்டதேயன்னதாகும்விண்மேவுகடவுளர்க்கே. (௪க)

கோதையிவள்-கோதையுடையவிவள். கடை-தாழ்வு, கடைதல்-

புகழ்தல்.

அயனேர்ந்திடாமுடிக்கோடீச்சுரநம்பரம்பொன்வெற்பிற்
புயலினநீரிவள்கூந்தற்குமுன்னர்ப்புகன்றிடுமுட்
பயமுற்றிருந்திடினோர்தான்சிறிதுபயமொழிந்தா
னயமுற்றிடீர்கடற்போய்விழவேண்டுமெனவின்றனனே. (௪உ)

ஆயத்துய்த்தல்.

மீயுற்றலும்பொழிற்கோடீச்சுரநம்பர்வெற்பிடத்திவ்
வேயுற்றசாரற்றினேப்புனத்தேயன்றென்மீதுவைத்த
நேயத்தனோங்குகரணஞ்செய்தாயினிநீயகன்றுன்
னுயத்துறைமணியஞ்செய்திடுபணியாரணங்கே. (௪௩)

தலைவன்பாங்கனைச்சார்தல்.

செறிப்புறுவான்புகழ்க்கோடீச்சுரேசர்சிலம்பிடைநா
முறுப்பன்முகன்றாலிடைநீடுமைம்பாலுறுதொடர்பைச

சிறப்புறுகேள்வி பெறுபாங்களுக்குத்தெளிவுபெறக்
குறிப்பினுமோதும்வெளிப்படைச்சொல்லினுங்கூறுதுமே. (௪௪)

நூலிடையுநீகேட்டதனு முடையாளுடையதொடர்பை-நன்னூலிடத்து:
ஒருவன்முதலியனும்பார்த்தேடுறார்பை.

பாங்கன்றலைவனையுற்றதுவினாதல்,

மன்றுடுமீசர்தென்கோடீச்சுரவெற்பவாய்மையுணா
யொன்றுதவரிடத்தொன்றினையோகடலேழுமொன்றாய்ச்
சென்றார்த்தெழினுமதியோடிரவிதிசைகெடினுங்
குன்றாதநின்புயக்குன்றமென்னேவிங்ஙன்குன்றுற்றதே. (௪௫)

தலைவனுற்றதுரைத்தல்.

விரித்துச்சொலற்கென்றனன்முடியாதன்பமேற்பகையைச்
சிரித்துச்சிதைத்திட்டகோடீச்சுரேசர்சிலம்படியிற்
சரித்திடுமென்மனப்போதகம்போம்வழிதன்னினின்றோர்
வரிக்கண்மின்னாங்குசத்தாலதனைமடக்கியதே. (௪௬)

மனப்போதகம்-மனயானை-அங்குசம்-அழகியதனம், தோட்டி.

பாங்கன்கழறல்.

கடுவமர்கண்டத்தர்கோடீச்சுரேசர்தண்கார்வரைமேற்
கொடுவடிவேலவிருபால்வழக்குங்குறித்தெவர்க்கும்
படுவறவோதிடுநீயின்னதென்னப்பகுத்தாைக்கு
நடுவறியாவொருபேதைகண்ணென்னிற்குநண்ணியதே. (௪௭)

தலைவன்கழற்றெதிர்மறுத்தல்

கனவல்விடபத்தர்கோடீச்சுரமன்னகன்னிதுத
வினவண்மணிக்குழைமாமுலைபார்வையெனவுரைக்குந்
தனுவுமகரமுங்கும்பமுமீனமுஞ்சார்ந்தங்குநீ
முனமுறகோக்கிடினன்பவிவ்வாறுமொழியலையே. (௪௮)

பாங்கன்றலைவனைப்பழித்தல்.

விரையார்கடுக்கையர்கோடீச்சுரவெற்பமேவிடுமுன
னுரைசேயார்கலைமதியோர்மாதரைப்பணிக்கொல்லியதாம்
திரையார்கவிசூற்றிடத்தேயினியொருசிற்றெறும்பிற்
கிரையாயிடுகமேருவுநீயிம்முமே. (௪௯)

* கலை பொருந்தியமதி-தரைமிவிருக்கும்பணி, மாதினைப்பணி.

மாலாகிநிற்பன்மலரோன்பிரமமருவிடுநம்
வேலாளிவண்விட்டவனூற்றதாற்றிறன்மிக்கவனே. (௫௯)

தலைவியைவியத்தல்

செக்கர்நன்மேனியர்கோடீச்சுரேசர்சிலம்பிலிவண்
மைக்கண்சிறுமியமால்விடந்தீர்த்திடும்வாயமிர்த
மிக்கதனைப்பொற்குடநெடுங்காமமென்வேலையினின்
றக்கனவின்பக்கரையேற்றிடும்மரசனையே. (௬௰)

தலைவன்றனக்குத்தலைவிநிலைகூறல்.

சுரும்புறுகொன்றையர்கோடீச்சுரேசர்சுடர்க்கிரிமேற்
கரும்புருவச்சிலைதன்னொடுநீலக்கணையுங்கொடு
பொரும்படைமாரன்றுணைபோலநின்றதப்பூங்கொடிவல்
விரும்பனெஞ்சதிருநறையூரவ்விரும்பொழிற்கே. (௬௧)

தலைவன்சேறல்.

படித்தலம்போற்றிடுகோடீச்சுரநம்பர்பைம்பொன்வெற்பின்
வடித்தடங்கண்ணிமுலையங்கையின் சொலின்வன்பகையென்
றடித்திடுமோமுன்பறித்திடுமோநின்றதட்டிடுமோ
தடித்துறுபந்துசெங்காந்தள்பைங்கிள்ளையைத்தண்பொழிற்கே. (௬௨)

தலைவியைக்காண்டல்.

செந்நெல்விளைவயற்கோடீச்சுரநித்தர்திண்சிலம்பின்
மன்னவபேரின்பநீடமுதீவண்முன்வாசுகிநற்
பன்னகம்பூட்டித்தனமலைமேலெனப்பண்ணுவள்போற்
பொன்னிறமால்வரைகாட்டிநிற்கின்றனள்பொற்றொடியே. (௬௩)

வாசுகிநற்பன்னகம் - வா*சுகி*நற்பல்*நகம்.வாசுகியெனும்பாம்பு
நிறம்-மார்பு,ஒளி.

கலவியின்மகிழ்தல்.

சலங்காத்தவேணியர்கோடீச்சுரேசர்தடத்துரத்தி
லலங்காவெழுத்தசைசீர்மேவுபந்தமடிதொடைகொண்
டிலங்காவளருமுறுப்பியல்பாவுற்றிடுமினைய
நலங்காமுறுகாரிகையின்பமீங்கெய்திநண்ணினமே. (௬௪)

அசையாததொய்யிலெழுத்திணங்கிய சிறப்புப்பொருந்தியபந்துபோன்றதனத்தினழகும் மடித்தமாலை பூண்டவுறுப்பாகியமார்பும்பொருந்தியமடந்தை-எழுத்துமசையுஞ்சீருந்தளையுமடியுந் தொடையுங்கூறுமுறுப்பியலும் பாவினியலும்பொருந்தியகாரிகை யாகியநூலின்பம்.

புகழ்தல்

திங்கட்கொழுந்தணிகோடீச்சுரேசர்சிலம்பிலிவ்
ளங்கத்திற்காலமு கொத்திடுங்கஞ்சமனையழகு
மங்குலைச்சார்ந்துறைமின்னொக்குமற்றைவடிவுகளுக்
இங்கெப்பொருளினுங்காணேமுழுதுமியைவதுவே (௬௫)

பாங்கியோடுவருகெனப்பகர்தல்.

படையுற்றபூதத்தர்கோடீச்சுரேசர்பனிவரைநா
ளடையுற்றிடுநல்லனமேகின்பாங்கிக்கினியொளித்து
நடையுற்றிடுதனலனன்றவளொடுநாளைவந்திக்
கடையுற்றிநின்னையனாடாநானெதிர்கைக்கொளவே. (௬௬)

பாங்கிற்கூட்டல்.

எனைத்தேடியாள்சிவன்கோடீச்சுரவெற்பிலெய்திநின்னைச்
சுனைத்தேடியாங்குறுங்காமனைத்தேடிடுந்தோழிமுன்னீங்
குனைத்தேடினேனெனமொன்றோதியன்னளொடொன்றிடுநீ
கனைத்தேடியைவண்டுகொம்போதிபாடுங்கதுப்பணங்கே. (௬௭)

பாங்கியையமுற்றோர்தல்-

கறையுறுகண்டத்தர்கோடீச்சுரநித்தர்சார்வரைமே
லுறையுமிம்மாதந்தமாதவர்போன்முன்னுணவொழித்தாண்
மறைபுகல்வாளமமனைவெறுத்தாளுடல்வாட்டமுற்று
ளறையுமிவையிதனாலுற்றனவென்றறிந்திலமே. (௬௮)

ஐயந்தீர்தல்.

அரியமறைப்பொருடன்னைமுன்னால்வருக்காலடியிற்
றெரியவுணர்த்தரன்கோடீச்சுரமன்னதேமொழியின்
சரியைகிரியைகளையந்திரிபின்மைசார்ந்தினிது
விரியுறும்போதோரிறையோகஞானம்விளைக்கின்றவே. (௬௯)

இறையோகஞானம் ஓரிறைவனதுபுணர்ச்சியுண்மையறிதல்.

பிறைதொழுகென்றல்.

அணிதாங்குகோடீச்சுரேசர்தங்கட்பொறியாதலினான்
மணிதாங்குவேலைமகிழ்வுற்றதாலுயர்வானகத்திற்
கணிதாங்குடுக்களின்காதலனாற்பிறைகந்தனொக்கும்
பணிதாழ்கருங்குழன்மாதேபணியிற்பலன்றருமே, (௭௰)

கட்பொறி-கண்ணிலெழுந்ததீப்பொறி, கண்-மணி பொருந்தியவேல்-வேலை, சமுத்திரம். கார்த்திகை யுடுக்களின்-பிள்ளை - நட்சத்திரநாயகன்.

சுனைவியந்துரைத்தல்.

தோடுறுங்காதினர்கோடீச்சுரநம்பர்தூய்வரைநீ
யாடுறும்போதிற்பிறழும்பணிகளைவதிருத்திக்
கோடுறுநெற்றித்திலகமுந்திட்டிக்குறுவெயரீந்
தேடுறுங்கோதைநின்கோதையிற்சூட்டியதெச்சுனையே. (எக)

சுனைநயப்புரைத்தல்.

நங்கந்தரத்தருமைகிந்திடுமத்தர்நஞ்சமரும்
வெங்கந்தரத்தர்தென்கோடீச்சுரஙித்தர்வெற்பிடத்திற்
சங்கந்தருமுத்தந்தந்திடுமேலென்றனையுமளி
யங்கந்தருவமிசைக்குஞ்சுனைக்கழைத்தேகணங்கே, (எஉ)

கந்தருவம்-பண், எண்வகைமணத்திலொருமணம்.

தகையணங்குறுத்தல்.

மருமலரோன்பணிகோடீச்சுரேசர்வரைவருநீ
திருமகளோமதன்காதலியோவெங்கடேமொழித
னுருவுளையன்னள்புனலாடற்கேகினளுற்றிடுஞ்சற்
றிருவிருமேவிவிளையாடலாமிங்கிருவிருமே. (எங)

நடுங்கநாட்டம்.

ஆருர்மழுவினர்கோடீச்சுரவெற்பிலாரணங்கே
பாரூர்வதுவோபறப்பதுவோவெம்பகையிடத்திற்
போரூர்செங்கோடுறுவன்கொடுங்குன்றம்புனையுமொரு
காரூர்கைம்மாக்கொளவேலெறிந்தானொருகாவலனே. (எச)

தலைவன்பாங்கியையிரவுவலியுறுத்தல்.

சருதடியார்கட்குயர்வரநல்குங்கருணையினர்
பருவரைவில்லினர்கோடீச்சுரவெற்பிற்பாங்கியெனுந்
திருவிங்கிருக்கின்றனளிவட்போற்றினச்செல்வநல்கு
மருவினச்செல்வமுன்வேண்டின்பமெய்தும்வழியிதுவே. (எரு)

பாங்கியையூர்வினுதல்.

மதியிருக்கும்வடிவாள்போலிருக்கும்வரிவிழியாய்
நதியிருக்குஞ்சடைக்கோடீச்சுரேசர்நகத்துறுநின்
பதியிருக்குந்தலம்வானேபுவியோபகர்தியிங்குக்
கதியிருக்குந்தலந்தேடிடுவேன்சென்றுகண்ணுறவே. (எசு)

பெயர்வினாதல்.

கந்தனைத்தந்தவர்கோடீச்சுரவெற்பிற்கண்டவுனை
யிந்திரையென்றனன்யானனைதுள்ளமிரதியெனு
மந்தரர்கோன்றுணையென்றார்சிலரினதயாய்ந்திடுவான்
வந்தனனின்பெயரிங்கெனக்கோதுகவாணுதலே. (எஎ)

மான்வினாதல்.

படிபுகழ்சீரினர்கோடீச்சுரத்தெம்பரமர்வெற்பின்
முடிமினசவேட்டத்தினெய்திடுமென்கணைமுன்னர்த்தப்பிப்
பிடியெனவோர்மானடைந்தது நாணும்பிடிபிடியென்
றடியுறவந்தனன்கானேன்கண்டாற்சொல்லணியிழையே. (எஅ)

வழிவினாதல்.

பெருவானவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கன்மின்னே
கருவாய்வனத்தைக்கடந்தெளியேனுடகளிப்பினொடு
மருவாய்பொழில்சூழ்சிவபுரங்கூடும்வழியுனது
திருவாய்மலர்ந்திங்கிதுதானெனவொன்றுசெப்புகவே. (எகூ)

கருவாய்வனம்-கருநிலக்காடு, கருவிற்படும்பிறவிக்காடு.

சிவபுரம் - சிவலோகம்;ஒருதலம்.

மொழிவினாதல்.

ஆலார்மிழலுறைகோடீச்சுரவள்ளலம்பொன்வெற்பின்
பாலாரிடத்திஞ்சிலர்திருவாய்மொழிபண்பறிந்தேன்
சேலாம்வரிவிழியாயித்தலத்திற்செவியுணர
மாலாமெனக்குன்றிருவாய்மொழியொன்றுவந்துரையே. (அய)

இவர்மனத்தெண்ணமியாதெனத்தேர்தல்.

வையுற்றசூற்படைக்கோடீச்சுரேசர்வரையிலிவர்
மையுற்றவேழம்பல்கேழலெய்தோமெனவன்மைசொல்வார்
கையுற்றதுதனைவாயுற்றதுபொய்கருத்துற்றதுஉ
மெய்யுற்றதுஉமறியேமெவரோவிந்தவித்தகரே. (அக)

எண்ணந்தெளிதல்.

குழைகாட்டுங்காதினர்கோடீச்சுரேசர்குவட்டிலிந்த
நுழைகாட்டிடையிவர்வில்லோடம்பின்றிநுழைந்துவந்தோர்

மழைகாட்டியமதமாவந்ததோவெனுமாற்றம்பொய்கைத்
தழைகாட்டிநங்குலமானைக்கொண்டேகிடச்சார்ந்தனரோ. (௮௨)

இருவருமுளவழிபொருமையிற்போதல்.

இறைவிடையூர்தியர்கோடீச்சுரேசர்திருவருளு
முறுமுனர்நாஞ்செய்தவப்பேறும்போலிங்கொருமுகிலிற்
செறியிருமின்போலரசியும்பாங்கியுஞ்சேர்ந்துறைந்தார்
குறுகிவின்மாரன்கொடுங்கோனடாத்துதல்கூறுவமே. (௮௩)

அவ்வகைகெடுதியுண்மனம்வினுதல்.

திங்கட்கொழுந்தணிசோடீச்சுரேசர்சிலம்படிக்கட்
டங்கியவென்மனமாங்கொருகாலென்றனையறியா
தெங்குஞ்சரிக்குமுடன்மீணடிமெஞ்சியிப்பொழுதீண்
டிங்கடம்பாலுற்றதோமங்கைமீருண்மையோதுமினே. (௮௪)

ஒழிந்ததுவினுதல்.

மாலோர்புறங்கொணடகோடீச்சுரேசர்வரையிடைநீ
ராலோலமென்னுங்குரலேவழிமறித்தன்னமன்னீர்
பாலோடுங்கிள்ளைகளெல்லாம்வருவித்துப்பைந்தினையின்
மேலோங்கிடுகுரலெல்லாமினிதுவிருந்திடுமே. (௮௫)

பாங்கியெதிர்மொழிகொடுத்தல்.

மலையாயவில்லினர்கோடீச்சுரேசர்வரையிலுன்கைத்
தலையார்கணைக்கும்விழிக்குமனத்திற்குந்தப்பியெங்கு
நிலையாதிங்குற்றகலைகண்டிலேமையநீடுநின்போற்
கலையாய்வதற்குப்பொழுதுளதோபுனங்காப்பவர்க்கே. (௮௬)

இறைவனைநகுதல்

இழைவளர்மார்பினர்கோடீச்சுரேசரிமவரைமேற்
கழைமதன்போதுகொண்டெய்திடலோர்ந்திவர்கான்விலங்கைத்
தழையதினெய்திடவெய்தினரீண்டித்தழையதனுன்
மழைமதவேழங்கயமாமுழையுமறிதருமே. (௮௭)

பாங்கிமதியினிலவரவர்மனக்கருத்துணர்தல்.

சிறக்குந்தினைகொண்டுகோடீச்சுரநித்தர்நீள்வரைக்கட்
பறக்குஞ்சுகமிவள்பாராளிவன்சுகம்பார்க்குமிவன்

மறக்குஞ்சரத்தைமறந்தின்னவள்விழிவன்சரத்தை
யுறக்கணானூறுமிவர்வேட்டமுங்காப்புமுணர்வுற்றவே. (௮௮)

தலைவனுட்கோள்சாற்றல்.

சிற்றேரிடைபங்கர்கோடீச்சுரேசர்திருவருண்முன்
பெற்றேன்சிந்தாமணிவேண்டினுநீவிர்பெறக்கொடுப்பேன்
பொற்றேரினையச்சுறுத்தல்குலீரிங்குப்போதநும்பாற்
குற்றேவல்செய்யும்விருப்பினுற்றேனென்னுட்கோளிதுவே. (௮௯)

பாங்கிகுலமுறைகிளத்தல்.

காரூர்களத்தரன்கோடீச்சுரமெனக்கற்றவர்சொல்
பேரூருனதிடஞ்சீறூரெமதிடம்பேருறநீ
பாரூர்முழுவதுங்காப்போனெங்காவலிப்பைம்புனநீ
கூரூர்படைமன்னனுங்குறமாதர்குறித்தருளே (௯௰)

தலைவன்றலைவியையுயர்த்தல்.

நங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரநம்பர்நாட்டினிடைச்
செங்கேழ்வண்டாமரைசேற்றெழுங்கள்ளியிற்சீர்கொளகி
லிங்கேயுதித்திடுமெங்கேயுதிக்கினென்னேதில்பொருள்
சங்கேயெனுநகளவுங்கள்ளைபைம்பொன்னுமத்தன்மையளே. (௯௧)

பாங்கியறியாள்போன்றுவினுதல்.

நனையாடுதண்பொழிற்கோடீச்சுரநம்பர்நல்வரைமேற்
சுனையாடுநர்பலர்பந்தாடுநர்பலர்சூழ்ந்தெழிலம்
மனையாடுநர்பலரின்னருளிங்ஙனமவாள்விழிகொண்
டுனையாடவித்தவளார்மன்னவாவுண்மையோதுகவே. (௯௨)

தலைவனிறைவிதன்மையியம்பல்.

நாகமங்கத்திற்புனையும்புராணர்நவின்மறையார்
பாகமங்கைக்கருள்கோடீச்சுரத்தெம்பரமர்வெற்பி
லாகமம்பொன்னுருக்காவியங்கண்ணிடையாய்மதனால்
சோகமங்குற்றிடவென்னையிவ்வாறுசெய்தூமொழிக்கே. (௯௩)

பாங்கிதலைவியருமைசாற்றல்.

உன்னுமப்பொன்னிங்கெளிதினுறுவதையவுன்றனக்குப்
பொன்னுமின்பந்தருந்தேருமுரம்பெறுபோர்க்களிறு

மின்னும்பிறவுமெங்கோடீச்சுரேசரெழிற்பதத்திற்
பன்னுந்துதியும்பரிவுமுள்ளோர்க்குப்பலிப்பனவே. (௯௪)

தலைவன்றலைவியின்றியமையாமையியம்பல்.

முன்னாவ்வேதனுங்காணாமுடியினர்முத்தநகை
மின்னமர்பாகத்தர்கோடீச்சுரப ரனைவின்னுதலாய்
கன்னற்சிறுவிலைதன்னன்மெலிந்திடிக்காலத்துங்க
ணன்னமில்லாவிடிற்சற்றுமில்லாதென்றனருயிரே. (௯௫)

கன்னற்சிறுவிலை-சிறியகருப்புவின்னயகன்,நாழிகைதோறுங்
குறைகின்றசிறுவிலைக்காலம்.

பாங்கின்குறைநீயேசென்றுரையென்றல்.

மின்னுற்றண்மதிக்காந்தமென்கல்லகமேவுமெழி
லுன்னுறுவண்ணமகிழ்முகங்காணினுருகுமன்றிப்
பொன்னுறுகொன்றையர்கோடீச்சுரேசர்பொதியவெற்ப
வென்னுரையாலுருகாதேகிநீயேயிசைநினைவே. (௯௬)

தலைவன்பாங்கியைப்பழித்தல்,

மட்டார்மலர்பொழிற்கோடீச்சுரநித்தர்வண்சிலம்பிற்
பெட்டார்கரையேற்றெனவிரந்தோரைப்பெருகுவெள்ள
நாட்டாற்றிடைவிடுவாரின்மின்னேநினைநம்பினைக்கை
விட்டாயுன்வஞ்சியெனும்பேர்ப்பொருளைவிளக்கினையே. (௯௭)

பாங்கிதலைவிபேதைமையூட்டல்,

தண்ணார்கமலக்கையர்கோடீச்சுரவெற்பசாற்றமெங்கள்
பெண்ணாரமுதனையாண்மிகப்பேதைபெரிதுகந்து
கண்ணாடிநீழலொடுபேசுவாள்கைபிற்பாவையையீ
துண்ணாதென்னென்பளெண்ணானுன்னுள்ளத்துறுதுயரே (௯௮)

தலைவன்றலைவியறிவுடைமைமொழிதல்.

செங்கையனாணினர்கோடீச்சுரேசர்சிலம்பிடைத்தன்
னங்கயற்கண்கொண்டெனக்குமைக்காட்டியனங்கனுக்கு
மிங்கயலின்னலன்போகவிடேலென்றிசைத்ததிரு
மங்கையைப்பேதையென்றோதலெவ்வாறுமடந்தையரே. (௯௯)

பாங்கிமுன்னுறுபுணர்ச்சிமுறையுறக்கூறல்.

கொற்றவமுன்னிற்சமைவுற்றவன்னத்தைக்கொண்டிடின்று
முற்றிடநானென்னைகோடைச்சுரவள்ளலோங்கருளான்
மற்றிருவாரமணிமுடியாதிமருவுமின்பம்
பெற்றிருப்போர்கட்குவேண்டிடுமோபின்பிறரருளே. (௩௰)

தன்னிலைதலைவன்சாற்றல்.

காதார்கயற்கண்ணிகோடைச்சுரநம்பர்காசிநின்றிப்
போதாரளகக்குமரியுற்றாடட்புகனெறிக்கண்
மீதாம்வடமலையாதிகணுக்குற்றுமேவினன்முன்
னீதானுஞ்செய்திடும்படிவேனச்சநெஞ்சிலற்றே. (௩௰௧)

போதாரளகக்குமரி-மலர்பொருந்தியகூந்தலுடையபெண், அறியநீர்வடி
வாகியவிந்நதி, ஆட-மூழ்க, புணர. நெறிக்கண்-வழியில், நெறித்தகண்.
வடமலை-வடமணிந்தமுலை, நீதரின், மூழ்குவன், புணர்வேன்.

பாங்கியுலகியலுரைத்தல்,

கார்கொண்டவாணமாதிகணீக்கிக்கலந்திடன்பார்க்
சேர்கொண்டவின்பருள்கோடைச்சுரவள்ளலேமவெற்பு
வார்கொண்டபூணையுறுகன்னிகையைவரைவுபெற
நார்கொண்டிசைப்பதுமாலையதாமிந்நன்னிலத்தே. (௩௰௨)

நீவரைகென்றல்.

வன்னிக்குமுன்னர்நுமரோடெமருமகிழ்வுபெற
மன்னித்தலம்புகழ்கோவேதாளமும்வச்சிரமும்
பொன்னித்திரையெறிகோடைச்சுரநம்பர்பொற்சிலம்பின்
கன்னிப்பிடியைவரைந்தணைப்பாய்புயக்கம்பத்திலே. (௩௰௩)

தலைமகன்மறுத்தல்.

ஆவாவெனக்கையிளைத்தாற்றழுங்குமவரையொரு
நாவாய்செய்தேறிக்கொடுகரைவாவெனுநண்பரொத்தாய்
தேவாதியர்பணிகோடைச்சுரேசர்சிலம்பணங்கை
நீவாகுடன்வரைந்துன்மாலகற்றென்றுநேரிழையே. (௩௰௪)

பாங்கியச்சுறுத்தல்.

படமன்னுபூணினர்கோடைச்சுரவெற்பின்பாலெம்முன்னர்க்
கடன்மன்னுமாவிற்களித்துவில்லேவிதுகண்டனரே

வடன்மன் னுமிக்குன் றவாணர்கடாமையும் றையவுனை
விடமொணவந் துவளைந் துகொள்வாரிந் தவேலையிலே. (௱௫)

தலைவன்கையுறைபுகழ்தல்.

மெய்யேந் துமிம்மணிகோடீச்சுரநித்தர்வெற்புறைவீர்
மையேந் துவரியொளிநீள்கயிலைவரணைகம்பை
யையேநிவற்றினிடையதிதன்பேரறையுமுன்னர்க்
கையேந் துவாணிந்திரன்கொணர்ந்தேனுங்களுக்கெளிதே- (௱௬)
உவரி, கயிலை, வரணை, கம்பை. இவற்றிடையெழுத்தாகிய வயிரம்.
இதன்பேர்.

பாங்கிகையுறைமறுத்தல்.

மேலோர்புகழ்பரன்கோடீச்சுரவள்ளல்வெற்புறைவோ
மேலோம்பிறரிடையாங்கொடுப்போமிவ்வெழின்மணித்தார்
வேலோடுலவுமாசேயுனக்காமிலைந்திடுநின்
பாலோர்க்களித்திடுதவுனைப்பாடியபாவலர்க்கே, (௱௭)

ஆற்றாநெஞ்சினோடவன்புலத்தல்.

மழைநிகர்கண்டத்தர்கோடீச்சுரேசர்வரையினெஞ்சே
யுழைநிகர்நோக்கியரோலாதுவாடென்கையொண்டளிரைத்
தழையுறமுன்னர்க்குழையெனமேலெவர்சாற்றினரோ
குழைவுறுகின்றதிதுநீகுழைவதென்கூறுகவே, (௱அ)

பாங்கிதலைவனையாற்றுவித்தகற்றல்.

ஒருவிடிப்போதிதுகாலமன்றெல்லையுதையத்துவா
மருவிடுமாலையைமன்னவன்றொடன்மனந்திருத்தி
யிருவிகற்பத்தின்கோடீச்சுரேசர்நெடுவரைமே
லருவியின்மாமுலைமீதுறவாக்குவனிதுவே (௱௯)

கிழவோன்மடலேபொருளெனமதித்தல்.

பூவேறினானுமலையேறினானுமுன்போற்றிசைப்பச்
சேவேறிவந்தருள்கோடீச்சுரேசர்சிலம்பினிடை
நீவேறுகண்ணிக்கலையநெஞ்சேயிங்குநீடுமடன்
மாவேறிமெள்ளப்பிடித்திடுவோமந்தவன்குயிலே. (௱௰)

வேறுகண்ணிக்கு-அலையாதே, வேறுநினைந்துவாடாதே
மடன்மாவேறி-பூவுடையமாவில், பனைமடலாற்செய்தபரியிலேறி.

உலகின்மேல்வைத்துரைத்தல்.

கோவார்துகிலினர்கோடீச்சுரவெற்பிற்கூறெளிதின்
மேவாமகளிர்கண்மேவுறுவானெஞ்சின்மேவுற்றுளோர்
பாவாயவர்கடமாவணைத்தூடுபனையையொரு
மாவாகச்செய்துநடத்துவரீதுமனுமுறையே. (௱௰௧)

அதனைத்தன்மேல்வைத்துச்சாற்றல்.

விடமுறுகண்டத்தர்கோடீச்சுரமன்னமின்னினையோர்
படமதிலீதென்னெழுத்தென்றெவரும்பகுத்துரைக்கத்
திடமுறத்தீட்டிக்கரங்கொடுநாளைத்தெரித்தபனை
மடன்மிசைநம்மூர்த்தெருமேல்வருவேன்மதிநுதலே. (௱௰௨)

பாங்கிதலைமகளவையவத்தருமைசாற்றல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சுரமன்னமின்றிருவாய்
மொழியுறுகாஞ்சிதிகழுறுசீரங்கமுந்திவற்றை
யெழிலுறுமன்னவெழுதுவையோவுய்த்தெழுதுவையேற்
கிழியெனக்கண்டோருரையாதெழுதக்கிழிதனையே. (௱௰௩)

தலைமகன்றன்னைத்தானேபுகழ்தல்.

வண்ணவெண்ணீற்றரன்கோடீச்சுரவெற்பின்மாதரையோர்
விண்ணுக்குருவிலையென்பாரதுவுண்டுமேலதன்க
ணெண்ணுஞ்சுனையுண்டதிலொருதாளிருநான்முகையுண்
டெண்ணிவைசொல்லன்றெழுதித்தருவனிங்கிவ்வண்ணமே (௱௰௪)

மாதரையோர்-உலகத்தோர், மாதினிடையாகிய.

விண்ணுக்கு-விசும்பிற்கு. அதுவுண்டு-அதுவுளதுமெய்தான்.

பாங்கிபருளியல்கிளத்தல்.

சூலாயுதத்தினர்கோடீச்சுரவெற்பிற்றோன்றிநீ
சேலாயகண்ணிபொருட்டினித்தாலஞ்சிதைக்கிலிதன்
மேலாயவண்டம்பலபோம்பலவுயிர்வீதலுறு
மாலாயவுன்னையுருத்திரனுமென்பர்மற்றபனே. (௱௰௫)

பாங்கிகொண்டுநிலைகூறல்.

ஒத்தேநின்னல்லவெல்லாமிசைப்பேனெவ்வுலகினுக்கும்
வித்தேயெனும்புகழ்க்கோடீச்சுரநித்தர்வெற்பின்மலர்க்
கொத்தேறியமுடிப்பொற்பேறிடுமென்கொடியிடைமே
வத்தேன்மறுத்திடினீயம்மடலேறளியரசே. (௱௰௬)

தலைவியிளமைத்தன்மைபாங்கி தலைவற்குணர்த்தல்.

மழுக்தடங்கையினர்கோடீச்சுரவெற்பமற்றிவணீ
யெழுத்திசையாதுமுன்சொற்பொருள்கொள்ளாதியாப்பணியின்
விழுத்தகவோதிமுடியாவிப்பேதைகண்மேவுதற்கென்
வழுத்துதிமேன்மைத்தனமிலைக்கூடமதித்திடினே (௱௰௭)

தலைவன்றலைவிவருத்தியவண்ணமுரைத்தல்.

உம்பர்கள்போற்றிடுங்கோடீச்சுரேசர்தமோங்கலில்வே
ளம்பலரான்மெலிவேனைத்தனவரும்பாலும்வலி
திம்பரலைத்திட்டதாலவ்விளங்கொடியேல்லையுறில்
வம்புசெயத்தக்கதேசிறிதேனும்வனமுலையே. (௱௰௮)

பாங்கிதலைவிசெவ்வியருமைசெப்பல்.

ழுறங்காரணன்பரன்கோடீச்சுரமன்னவஞ்சியென்றே
கழங்காடிலளெழிற்பந்தாடிலளக்கலியறியேன்
முழுங்காற்கழுன்மன்னவாவுன்னகவலக்கண்மொழியத்
தொழுங்கால்விருத்தமுறும்பதமன்றிதுசொல்லுதற்கே. (௱௰௯)

தலைவன்றலைவிசெவ்வியெளிமைசெப்பல்.

பார்கேட்டகீர்த்தியர்கோடீச்சுரேசர்பனிவரையி
னீர்கேட்டவர்க்கருள்கார்தனைநோக்கினெடிதுவக்கு
மோர்கேட்டுவாங்கியவம்மயிலும்மயிலென்றணியற்
பேர்கேட்குமுன்னரனமேகளித்திங்குன்பின்வருமே. (௱௨௰)

பாங்கியென்னைமறைத்தபின்னெளிதெனநகுதல்

நெய்யுந்திரியுந்தகளியுந்தீயுமுன்னேர்ந்துதம்மிற்
செய்யுஞ்சுடராய்த்திகழ்வும்பின்றாண்டலுறுத்திறமு
மையகண்டென்னையெண்ணுதவளின்பத்தடைவெண்ணிணுய்
வையம்புகழ்பரன்கோடீச்சுரவெற்பில்வாய்ப்பிதுவே. (௱௨௧)

அங்கைபொருதவன்புலம்பல்,

மங்கைநல்லாயெழிற்கோடீச்சுரநம்பர்மால்வரைமேற்
றங்குறுவேண்மலராலெறிந்தானதுதண்புனத்தோர்
பைங்கிளிமேற்பட்டுருவியென்னெஞ்சினும்பட்டலைத்த
திங்குனக்கோதினனீநகையாலெறிந்தீர்ந்தனையே. (௱௨௨)

பாங்கிதலைவனைத்தேற்றல்.

மேலும்பர்போற்றரன்கோடீச்சுரவெற்பின்மேவுநகையிற்
காலுறுகற்கடகச்சிங்கமேயந்தக்கன்னியுன்றன்

பாலுறச்செய்வேனிராசியமாகப்பருவரல்போக்
கேலும்வகைமுயன்றான்முடியாததென்னித்தலத்தே. (௱௨௩)

### பாங்கிகையுறையேற்றல்.

நாதாந்தமேவரன்கோடீச்சுரவெற்பினண்ணுமங்கள்
போதார்குழலிக்குன்கையுறையோதினன்போவிங்கென்ன
வாதாவெனாளினிப்போதுமென்றேயிங்குவந்தனன்யா
னீதாவுலகுக்குத்தாதாவெனச்சொன்னேரிந்தகையே. (௱௨௪)

### தலைமகனுற்றல்.

பொன்மாலையன்பகழ்கோடீச்சுரநம்பர்போற்றிடுநஞ்
சொன்மாலையன்புறக்கொள்ளுதல்போலிந்தச்சோலைமணி
வின்மாலையன்னளுக்கேற்றனணமீதுமெலிவுதரு
வன்மாலையன்னதையாற்றிடுமாலையைமாற்றுவளே. (௱௨௫)

### பாங்கியிறைவிக்கவன்குறையுணர்த்தல்.

சித்திரபானுசுபானுமதியெனுஞ்சீர்நயனர்
சித்திரமாநகர்க்கோடீச்சுரவெற்பிற்றேர்ந்தயன்செய்
சித்திரமேயோர்சுகங்காண்கிலனுந்திகழொருவன்
சித்திரமாந்தழைகைவாடவாடித்திரிந்திடுமே. (௱௨௬)

### தலைவியறியாள்போன்றுகுறியாள்கூறல்.

மன்றிடையாடல்செய்கோடீச்சுரேசர்மனத்தருள்கொண்
டன்றுறுபத்திரயோகிக்கறந்தவமாமெனவையு
மொன்றொருகோடியதாமித்தலத்திலுறைந்திடிங்கே
யென்றுரைத்தாரவனவ்வாறிருந்தனனேந்திழையே. (௱௨௭)

### பாங்கியிறையோற்கண்டமைபகர்தல்,

சைவாகமஞ்சொன்னகோடீச்சுரேசர்தடத்துநம்பா
லவ்வாரணமுங்கலையுமுறையுடனன்றுகந்து
செவ்வாவினுபவரின்றேதுகேட்குந்திறத்தினரோ
மைவாழ்பொழிலிடைவந்துநிற்கின்றனர்வாணுதலே. (௱௨௮)

### தலைவிபாங்கியைமறைத்தல்.

விழியுறுபாலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பணங்கே
வழிநடப்போரவ்வழிகேட்பர்தாமங்குவந்தவகை

மொழிவரிவையுமற்றெனைக்குறித்தோவொன்றுமுன்னலைநீ
பழிதருமோநங்குலத்தினுக்கீதென்பகர்ந்தனையே. (௱௨௯)

பாங்கியென்னைமறைப்பதென்னெனத்தழாஅல்

ஏறூர்கொடியரன்கோடீச்சுரமன்னவேந்திழைமெய்
வேறுவியொன்றுவிருந்தேமிருவருமேலதவு
மாறுகவெண்ணணியின்றென்றேபுராணவசநம்விட்டுத்
தேறுமறைகூறுதிமெக்கிதுசிறந்ததன்றே, (௱௩௰)

பாங்கிகையுறைபுகழ்தல்.

மறியுறுகையரன்கோடீச்சுரவெற்பின்மன்னர்தந்த
முறியிதுன்காதிற்கணிகுழையாம்பின்னுமொய்குழற்கு
நறியதுவாய்மேவலங்கலுமாங்கைக்கொணற்கிளையாஞ்
சிறியமருங்கினுக்காடையுமாமினசத்தேமொழியே. (௱௩௧)

தோழிகிழவோன்றுயர்நிலைகிளத்தல்.

மறவினைதீர்த்தருள்கோடீச்சுரேசர்வரையில்வெயி
லுறவினைவுற்றிப்பேடையைத்தன்சிறையூடணைத்த
புறவினைநோக்கியகவினைதீர்ந்தப்புரவலர்நீ
ணறவினைமேவலர்க்கோதைநின்றார் சொன்னலிவடைந்தே. (௱௩௨)

பாங்கிமறுத்தற்கருமைகூறல்

தையனல்லாய்சிவன்கோடீச்சுரவெற்பர்சார்ந்துதினங்
கொய்யுந்தழைதந்தக்காவுமெலிந்ததுகொய்தவர்தங்
கையுமெலிந்ததவர்க்கிசைவாம்பதங்கட்டுரைத்தென்
பொய்யுமெலிந்ததுநானுமெலிந்துன்கட்போந்தனனே. (௱௩௩)

பாங்கிதலைவன்குறிப்புவேறாகநெறிப்படக்கூறல்

சேய்தந்தநாட்டத்தர்கோடீச்சுரநித்தர்திண்சிலம்பிற்
காய்தந்திடும்பனைமிதேறினல்லகனிதருமென்
றாய்தந்தகோற்றொடியாங்கிசைத்தாரன்பரன்னவர்தம்
வாய்தந்தசொல்லிதறியேனவர்தமனக்கருத்தே. (௱௩௪)

பாங்கிதலைவியைமுனிதல்.

மின்னேயசெஞ்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்புறநம்
முன்னேயந்தன்னைக்குறித்துரைத்தேனிம்மொழியனமே
பின்னேயதுசென்றதோர்ந்திலனீயென்பிழைபொறுத்தி
னென்னேயமாதருக்கோதிடநீநின்னுளக்கருத்தே. (௱௩௫)

தலைவிபாங்கியைமுனிதல்;

அனத்துக்கிசையடக்குமின்னேயின்றளியனான்றன்
மனத்துக்கிசையடங்கிடவோவுண்மறுவறுநம்
மினத்துக்கிசையடங்கிடவோசொல்லினத்துக்கெனாக்
கனத்துக்கிசைகண்டர்கோடீச்சுரேசர்கதிர்வரைக்கே. (௱௩௬)

தலைவிபாங்கிகையுறையேற்றல்.

ஓணத்தவன்போற்றவிட்டத்தன்கேட்டையுறானடியார்
காணத்தகுபரன்கோடீச்சுரமன்னகாரிகைநா
ணாணத்தகுவதெனினுமறேனின்சொனல்லதிது
பூணத்தகுவதென்றாய்தருவாய்நின்கைப்பூந்தழையே, (௱௩௭)

தலைவிகையுறையேற்றமைபாங்கிதலைவற்குணர்த்தல்,

தன்னொத்திடுசிவன்கோடீச்சுரவெற்பசார்ந்தளித்தேன்
முன்னொற்றியூர்வரிநாட்டத்திலோங்குமுதுகுன்றமா
மென்னுந்தனத்தணைத்தொண்முல்லைவாய்முத்தமீந்தனள்பின்
மன்னத்தகையமயிலையொப்பாளுன்றன்மாந்தழைக்கே, (௱௩௮)

பாங்கிதலைமகற்குக்குறியிடங்கூறல்.

ஆனியிலம்பலத்தாடிநல்லாவணியார்கொடியான்
கானியல்கொன்றையன்கோடீச்சுரமன்னகார்வரைக்கண்
வானியல்காவொன்றதிலேசுகமுன்மருஉமதுவே
தேனியல்கோதைவிளையாடிடமுங்கிவசவதிலே. (௱௩௯)

பாங்கிகுறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

அலைகொளுமாவினின்மெய்ம்மணங்கூடுறவாடிவெம்மு
விலைகொளுஞ்சூலத்தர்கோடீச்சுரேசரிமையமென்னு
மலைகொளமென்சொற்பயிற்றிமற்றீண்டுவரவருதி
சிலைகொளும்வாளிநிகர்விழிவாணுதற்சிற்றிடையே. (௱௪௰)

குறியிடத்துய்த்துநீங்கல்.

சேவலர்கேதனர்கோடீச்சரவெற்பிற்சேரவுறு
நாவலர்தம்மைநின்றிங்குநின்கைக்கொள்கயத்தொண்கஞ்சப்
பூவலர்நீலமெலாமங்குநான்றனிப்போய்க்கொணர்கே
னேவலரின்றிமதனேங்கச்செய்குவளைத்திரளையே. (௱௪௧)

இறையோன்குறியிடத்தெதிர்ப்படுதல்,

இறமாரிவ்வேனிலிற்கோடீச்சுரேசர்சிலம்பிலென்மேன்
மறமாரிகல்செய்மதன்றனையோட்டிமருவெனக்குன்
னிறமார்மணிமுடிவேய்ந்தரசேந்திடநீடுநினைந்
துறமாதுநீயிவண்காணேவவந்ததின்றேருங்கருளே. (௩௪உ)

புணர்ச்சியின்மகிழ்தல்,

மீனந்தநோக்கிமுன்னுமெய்தகத்துயர்வெப்பகல
வானந்தமேவிமனவாசகத்துமதிப்பரிதாய்த்
தேனந்தமார்கொன்றைக்கோடீச்சுரேசர்சிலம்படிகு
மானந்தவெள்ளத்திருவோமுங்கைகலந்தாடுவமே, (௩௪௩)

புகழ்தல்,

நதிவார்சடையரன்கோடீச்சுரவெற்பினல்லதின
மிதுவாகுநாளிங்கனைந்துநின்பேரின்பமெய்தலுற்றேன்
மதிவாணுகலாய்பொருந்துமுன்னத்தமருவலன்றித்
திதிவாரயோககரணங்கண்மேலுந்திடமுற்றவே (௩௪௪)

அத்தம்-கை, அத்தநாள் திதிவாரயோககரணம்-நிலையுற்ற
வன்புறுபுணர்ச்சிநிலைகள்.

தலைவன்றலைவியைவிடுத்தல்

வாங்கியமேருவிற்கோடீச்சுரசித்தர்மால்வரைநின்
றீங்கியலுற்றெனைக்காத்தனைமேலனைமென்னடந்
தாங்கியன்மஞ்ஞையெனப்போயுனைக்காத்தருகிருக்கும்
பாங்கியர்கூட்டமெனுங்கூட்டிடையுறைபைங்கிளியே. (௩௪௫)

பாங்கிதலைவியைச்சார்ந்துகையுறைகாட்டல்,

திகைகொண்டவான்புகழ்க்கோடீச்சுரசித்தர்திண்சிலம்பிற்
றொகைகொண்டகஞ்சமெற்காணுமுன்கண்ணீர்சொரிகின்றவும்
பகைகொண்டிலவெனமெய்வாடிநின்றவும்பற்றிலன்முன்
னகைகொண்டுநின்றவிதுகொண்டுவந்தனனன்னுதலே, (௩௪௬)

பாங்கிதலைவியைப்பாங்கிற்கூட்டல்.

தீங்தேமலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சிலம்பினின்று
போங்தேமணம்பெறுமாவியுற்றுடிபிப்போதுகொண்டா

யேந்தேரிளமுலையாய்விளையாடற்கினிப்பொழிற்க
ணாந்தேடுமாதர்நமைத்தேடுமுன்னங்குருகண்ணுறுவமே, (௱௪௭)

பாங்கு தலைவற்கோம்படைசாற்றல்.

சகத்திருத்தேரினர்கோடீச்சுரவெற்பசாறுபெடங்கள்
சுகத்தின்பொருட்டிற்றுழன்றுதென்னை நினைச்சுகந்துயர
மிகத்தியங்காதெதிர்கண்டோர்க்கிவெண்ணைத்தெவலேவலைடுன்
னகத்திடப்படஞ்சரம்வைத்தினிக்காத்திட ருள்புரிந்தே. (௱௪௮)

விருந்துவிலக்கல்

ஆறுறின்மேலுறைகோடீச்சுரநம்பரப்பொன்வெற்பின்
மாறுறுகள்பலவாறுமவ்வாறெல்லைவந்தொளிருங்
காறுறிருந்தின்னல்செந்தேனொடுநற்கனிதருவேன்
றேறுறுணர்மன்னவாகொண்டுறங்குபின்சென்றருளே (௱௪௯)

விருந்திறைவிரும்பல்

சமரவெஞ்சூலத்தர்கோடீச்சுரவெற்பிற்சாற்றுமன்போ
டமரருணவிற்றினைமாவுந்தேனுமளிப்பிரெனிற்
கமலையன்னீரென்றவைப்பலன்மேலிங்ஙன்கண்டலவோ
குமரக்கடவுள்குடிகொண்டனனிக்குறிஞ்சியிலே. (௱௫௰)

கிழத்திமாலையம்பொழுதுகண்டிரங்கல்,

பொருந்தியமால்விடைக்கோடீச்சுரேசர்புகழ்க்கிரிமே
லருந்திறல்வேள்விடுமுல்லைமென்பூசரமாற்றலளாய்
வருந்திடுவேற்குருநீடுமிச்செவ்வுந்திமாலையினோந்
திருந்திழையீண்டுவரவிட்டதார்பின்னுஞ்செட்புகவே. (௱௫௧)

பாங்கிபுலம்டல்.

சேவுற்றுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பின்மதன்
மாவுற்றதன்னவன்றேருற்றதாங்கவன்வணகவிகை
மேவுற்றதன்னேன்றனைவாவிரைந்தெனவெங்குயிலோ
கூவுற்றதீண்டினியென்படுமோதனிக்கோற்றொடியே. (௱௫௨)

தலைவனிடத்தலைவிவருந்தல்.

கருமுத்தமாலையன்விண்ணோர்பணிந்துகலந்துவலம்
வருமுத்தமாலையர்கோடீச்சுரேசர்வரையிலன்று

குருமுத்தமாலைபலகொடுத்தார்வந்துகூடியெனக்
கொருமுத்தமாலையிப்போதுதந்தாலுயிருய்குவனே. (௫௩)

உத்தமவாலையர்-கொடுத்தார்-கொடுத்தவர் மாலையாகியவிப்போது.

வந்தொருமுத்தங்கொடுத்தால்.

தலைவியைப்பாங்கிசுற்றல்.

வணங்கருவெய்யோன்முதலவர்போய்ப்போய்வருதல்கண்டு
மணங்கவரீண்டுத்தணந்தனரென்னவருந்கலென்னீ
பணங்கருபூணினர்கோடீச்சுரத்தர்பைம்பொன்வெற்பிற்
றணந்தவர்மீண்டுமணைந்திடுவார்மென்றளிரியலே (௫௪)

தலைவிமுன்னிலைப்புறமொழிமொழிதல்.

அரியாரணன்முன்னடிமுடிகாண்டற்கரியவர்கா
விரியார்தடங்கரைக்கோடீச்சுரத்தர்வெற்பிடத்திற்
றெரியாருமுற்றத்தெரிந்தாருமோவிற்றெளிவரல்லாப்
பெரியார்க்குணர்த்தினுரைத்தவையாவும்பிழைபடுமே. (௫௫)

தலைவிபாங்கியொடுபகர்தல்.

நாணவொண்ணுக்கவிற்கோடீச்சுரேசர்நளிர்வரைமேற்
காணவொண்ணுநல்லோர்தமைக்காணிற்கலந்திடன்பு
பூணவொண்ணுதன்புபூண்டாற்பிரிவுபொருந்தவொண்ணு
தேணவொண்ணுதப்பிரிவுறினுவிபின்னேந்திழையே. (௫௬)

தலைவியைப்பாங்கியச்சுறுத்தல்.

சேவையுகைப்பவர்கோடீச்சுரேசர்சிலம்பிலொரு
கோவையகம்வைத்துலாப்புறங்காட்டுதிகூறிதனுட்
பாவைநினைக்குரலெல்லாஞ்சுகங்கொடுபாழினவா
லேவைநிகர்விழியாயினிகாப்புமக்கில்லிடமே. (௫௭)

நீங்கற்கருமைதலைவிநினைந்திரங்கல்.

கல்லார்புகழ்சிவன்கோடீச்சுரவெற்பினுன்மூசனைவ்
வில்லாருடனமக்காவியொன்றுகமெய்வேறுசெய்தச்
சொல்லாருமெய்களுமாண்பெண்ணெனச்செய்துதோற்றவருட்
கல்லாகம்முண்மலராகச்செய்ததென்கற்பனையே. (௫௮)

தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்.

தாதாடுகொன்றையர்கோடீச்சுரேசர்சயிலமலர்க்
கோதாயுன்னன்பீர்தந்தேரோதைகேளினிக்கூறுவதென்

போதாமதன்கணையாருயிராங்தென்றல்புத்தரு நின்
மீதாமதிக்கதிருன்றனக்கோ திவ்வியனிலத்தே. (௨௫௯)

பாங்கிதலைவற்குச்சிறைப்புறமாகச்செறிப்பறிவுறுத்தல்.

தனத்தத்தைமானுக்குகவுகோடீச்சுரத்தானுவெற்பி
னினத்தத்தைகாளககணியார்மலர்வாயினுலெமர்கதிந்
தினத்தத்தையார்தினைகொய்கெனவோதினர்சேர்ந்தவரிப்
புனத்தத்தையாற்றுவர்யாம்போதுநீர்சுகம்பூண்டிருமே. (௨௬௰)

முன்னிலைப்புறமொழிமொழிந்தறிவுறுத்தல்.

சிறந்தார்புகழ்வன்கோடீச்சுரவெற்பர்சென்றங்கெம்மை
மறந்தாலுநீவிர்மறவாதிருமின்மறக்கின்வரி
நிறந்தாங்கியவண்டுகாளளியாரெனுநீடுபெயர்
திறந்தானுறுதிங்குநாங்கள்செல்வோந்தினைசென்மனைக்கே. (௨௬௧)

பாங்கிமுன்னின்றிற்செறிப்புணர்த்தல்.

நிறந்தருவேங்கைதென்கோடீச்சுரநித்தர்நேரியின்வாய்
திறந்ததுநோக்கியெமரீங்கடைந்துதினைகொய்தெம்மை
மறந்தருமிங்ஙன்வைக்கொண்டெனக்கொண்டுமன்னவெங்க
ளறந்தருமில்லில்லைக்கின்றனர்போதுமவர்வழியே, (௨௬௨)

பாங்கிமுன்னின்றுணர்த்தியோம்படை சாற்றல்.

எங்கேதமன்பரிருக்கினுமாங்குற்றிசைக்குழல்
வெங்கேதந்தீர்த்தருள்கோடீச்சுரேசர்வெற்பில்மப
விங்கேதங்காமற்றினைக்கதிரோடில்லமெய்துதும்
மங்கேதமங்கர்கூந்தலைக்காக்கவணைந்தருளே, (௨௬௩)



தலைவன்றஞ்சம்பெறுதுநெஞ்சொடுகிளத்தல்.

நீளாசுகச்செயுங்கோடீச்சுரநம்பர்நேரிநல்லார்
கேளாசுகவெள்ளத்துற்றழைத்தேகக்கிளர்மனைப்போய்
வாளாசுகமுறவைகுவராண்டிங்குந்தமர்செய்
யேளாசுகத்தைநெஞ்சேயினியாவர் விலக்குவரே. (௨௬௪)

இறைவனைப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

முன்போலுமெய்யினர்கோடீச்சுரேசர்புகழ்வரைக்கண்
முன்போலடிக்கடிவாரல்வெற்பாவிம்முதிர்புனத்தி
லன்போடிளங்கன்றிடைப்புனிற்றுவெனவன்னையொளிர்
மின்போனுடங்கிடைதன்பாலருமெங்கவேலையுமே. (௨௬௫)

இறைவினையப்பாங்கிகுறிவரல்விலக்கல்.

உலகந்தருசிவன்கோடீச்சுரமன்னவொண்ணுதலுன்
றிலகமுங்கூந்தலும்போதுமெய்ச்செவ்வியுஞ்சேரக்கண்டு
நலகங்கழுத்துநகைத்துயிர்த்தேகினணம்மனையின்
றிலகந்தருமிவ்விடமவ்விடமாமினிநமக்கே. (௱௬௬)

தலைவியாடிடநோக்கியழிதல்.

மறக்கதிர்ச்சூலத்தர்கோடீச்சுரேசர்வரைநெருநற்
றிறக்கிள்ளைகள்புனம்வாராதகற்றினஞ்சேரவின்று
நிறக்கிளர்பூஞ்சுனைதன்னொடிச்சோலைநிழலும்விட்டுப்
பறக்கின்றனஞ்சிறைகொண்டடங்கத்திங்குபுலித்திட்டதே. (௱௬௭)

பாங்கியாடிடம்விடுத்துக்கொண்டகறல்.

இழைநோக்குமார்பரன்கோடீச்சுரவெற்பில்யாமிழைத்த
பிழைநோக்கிடாதெழிற்பைங்கிளிகாளெம்பிரிவுவந்தும்
முழைநோக்கிழைக்கிசைத்தாரோதியூர்வழியூரவர்கண்
மழைநோக்கியேகுமெனவுண்மையோதிவரவிடுமே. (௱௬௮)

இறைவன்குறிவயிற்சென்றிரங்கல்.

குழையார்செவியினர்கோடீச்சுரேசர்குவட்டிடையவ்
வுழையார்விழியனைக்காண்கிலமோர்வழியோர்ந்திலநந்
தழைபார்வங்கொண்டங்ககன்றிருந்தனந்தன்னின்மன்னோ
ரிழையார்யிருந்தனமென்றுலவருடனேகுவமே. (௱௬௯)

வறுங்களநாடிமறுகல்.

மந்தூகினிச்சடைக்கோடீச்சுரேசர்வரைத்திருமான்
வந்தார்வத்தோடம்மனையாடுமோமைவனையொலிக்கப்
பந்தாடுமோசுகம்புள்ளினங்காளிந்தப்பைம்பொழிற்கட்
டங்காளுமோவொருகாலமுன்போலத்தமியனையே. (௱௭௰)

வாழுமூர்நோக்கிமதிமயங்கல்.

பெருவிண்ணவர்புகழ்கோடீச்சுரேசர்பிறங்கலினந்
திருவின்புறமூரகந்துசிறாரதிற்செறிவோ
ரிருவின்மறவர்நளன்போலநாமுமவ்விந்திரன்பா
லொருவிஞ்சைபெற்றிதற்போய்வரலாமங்கவூர்தனக்கே. (௱௭௧)

இறையோனிருட்குறிவேண்டல்.

வணக்தங்குவார்சடைக்கோடீச்சுரேசர்மணிவரைவண்
டிணங்கங்குகோதைநின்சீறூரிடத்தின்றிரவுதனிற்

தன்றங்குகாவின்முனைவாளெனக்கிருகைக்கிறையத்
கனந்தந்தவர்தம்மிடைவருவேனின்னுந்தான்பெறவே. (௱௭௨)

பாங்கிநெறியினதருமைகூறல்.

நெடுங்கயிலாயத்தர்கோடீச்சுரநித்தர்நேரியின்பாற்
கொடுந்துன்றுநீடுவளரானைக்காவுங்குறிப்பின்மன
நடுங்குமிகுபுனற்கொள்ளிடவாறுமிந்நாளிரவி
படுங்கதிர்வேலகடந்திண்டணைதலருமையதே. (௱௭௩)

தலைவனெறியினதெளிமைகூறல்

ஒளியார்செம்மேனியர்கோடீச்சுரேசருயர்வரைமேற்
றெளியாரமுகந்தகாரிகைமுகத்திங்களுநரு
வெளியாயுறும்போதிருளெனக்கேதன்றிமேலுமந்தக்
களியார்மயின்முற்பணிதொன்றலைதுகனங்குழையே. (௱௭௪)

பாங்கியவனாட்டணியியல்வினாதல்.

நீடும்புகழரன்கோடீச்சுரவெற்பநேருனது
நாடுமந்நாட்டுநறுநுதற்பாவையர்நாளுமினி
நாடுமமுதத்தின்சீருந்தளைசெய்தணிதொடையும்
பாடுமப்பாவும்பயிலுமினமும்பணித்தருளே. (௱௭௫)

தலைவனவனாட்டணியியல்வினாதல்.

என்னாட்டணிநோக்கிடநீவருங்காலியம்புவன்முன்
னின்னாட்டியலிசைநாடகமாடுதிநீயெனக்குப்
பொன்னாட்டினர்பணிகோடீச்சுரநம்பர்பொற்கிரிமேல்
வன்னாட்டியதன்னகொங்கைமின்னேரிடைவாணுதலே. (௱௭௬)

தன்னாட்டணியியல்பாங்கிசாற்றல்.

மாதாரமார்பங்கர்கோடீச்சுரேசர்வரையிடமே
பாதாரமாகவிருந்தாடுவார்மயிலாடுதுறை
நாதாரம்பாமெனுங்கண்ணார்மகளிர்தென்காஞ்சியொடு
கேதாரம்பாடுவரெங்கள்பொன்னாட்டினுங்கேளரசே (௱௭௭)

பாங்கியிறைவிக்கிறையோன்குறையறிவுறுத்தல்

வெவ்வாண்மழுப்படைக்கோடீச்சுரவள்ளல்வெம்பின்வரி
வெவ்வாணம்படுங்குழலாய்மதியின்கலையமுதை

யவ்வாதரங்கொள்சகோரமுண்காலத்தரசருன்பாற்
செவ்வாய்க்கிழமையமுதுக்குத்தாம்வரல்செப்பினரே. (௱௭௮)

நேராதிறைவிநெஞ்சொடுகிளத்தல்.

தோட்டுவிற்காதரன்கோடீச்சுரவெற்பிற்றோன்றியசெங்
கோட்டுயர்வேழத்தெதிர்நமைக்காத்தவர்கூடிவரி
பாட்டுளர்கானத் ராவரச்செய்தனள்பம்பரத்தை
யாட்டுவிக்குந்தனத்தாணெஞ்சமேயின்னதாய்ந்திலளே. (௱௭௯)

தலைவிபாங்கியோடுநேர்ந்துரைத்தல்.

முன்னணமக்குயிராவியிலீந்தமுதல்வர்வந்திங்
கென்னுருயிர்காத்திடுதியென்றாலதற்கென்செயலாம்
வின்னணபணிகொண்டகோடீச்சுரவள்ளல்வெற்பிடத்தி
லுன்னுவகத்திற்கிசைந்ததைநீயேயுரையணங்கே. (௱௮௰)

நேர்ந்தமைபாங்கிநெடுந்தகைக்குரைத்தல.

திகையுலவும்புகழ்க்கோடீச்சுரநம்பர்திண்சிலம்பிற்
றகையுறுமாதுளமமன்காய்தனைப்பகர்தந்திரந்தா
னகையுறுவேலமெலக்கனியாக்கினளன்பணிந்து
தொகையிதுவாமேல்வகையும்விரியுந்தொடர்ந்துணரே. (௱௮௧)

குறியிடைநிறீஇத்தாய்துயிலறிதல்

இலங்கையிற்காவையனுமானலைத்ததெனத்திருக்கை
யிலங்கையிற்சூலத்தர்கோடீச்சுரேசரிமையவெற்பி
னிலங்கையினீள்விழிமானேநஞ்சோலையையீடழிதக
திலங்கையிற்போகவுஞ்செய்திட்டதானையொன்றின்றுவந்தே. (௱௮௨)

இறைவிக்கிறைவன்வரவறிவுறுத்தல்.

முடிவனைகொன்றையர்கோடீச்சுரேசர்முருகுவெற்பி
னடிவளரோனம்புனத்தேபகல்வந்தவம்மதமா
கொடிவளர்காவினிடைவந்துதன்னொடுகூடவந்த
பிடிவரனோக்கிநிற்கின்றதுவாணுதற்பெண்ணரசே. (௱௮௩)

குறியிடத்திறைவியைக்கொண்டுசேறல்.

ஆடகவில்லினர்கோடீசசுரேசருண்மருவிச்
சூடக்காந்தளஞ்செங்கையின்னேமுகில்சூழ்பொழில்கு

ழேடகமார்திருப்பூவணம்பார்த்திறைகூடலுங்கண்
டீடகமேவுதிவாராய்சிவநிசியின்னதிலே. (௱௮௪)

குறியிடத்துய்த்துநீங்கல்

பணங்கொண்டபூணினர்கோடீச்சுரமன்னபாவையிருள்
வணங்கொண்டகோதைக்கணிசெயநான்மென்மலர்பறித்துக்
கணங்கொண்டணைவலிக்காவகத்தேநில்கருதிடுநன்
மணங்கொண்டுலாவுறுதென்றலுன்மேனிமருவுறவே. (௱௮௫)

தலைவனெதிர்ப்படுதல்.

ஊர்திறலேற்றனர்கோடீச்சரவெற்பிலோதுவரி
நேர்திறம்பாடுமைக்கோதைநல்லாயிந்நிசியில்வெய்யோன்
சீர்திறம்பாத்தன்கரத்தாலடைத்திட்டதிண்மனையக்
கார்திறந்தார்வந்தெவ்வாறுவந்தாய்தனியாருயிரே. (௱௮௬)

தலைவியாற்றினதருமைநினைந்திரங்கல்.

வில்லரிமேருவெனமேல்வளைத்தவர்வில்வநறு
வல்லரிசூடியகோடீச்சுரேசர்வரைக்குறவர்
கொல்லரிகுத்தெனச்சூழ்ந்திடுங்கானிடைக்கொற்றவநீ
யல்லரிவேழம்பிழைத்தீண்டணைந்ததருமையதே. (௱௮௭)

தலைவன்றேற்றல்.

சினத்திரிசூலத்தர்கோடீச்சுரேசர்திருப்பதமென்
மனத்துறலாலெதிர்தோன்றுங்கடங்கன்மடங்கியது
வனத்திற்கரியுங்கரிந்ததுநீங்கின்றிவந்தனன்யா
னினத்திகழ்பொற்றொடிக்கையா யொளிமுன்னிருளில்லையே. (௱௮௮)

புணர்தல்.

தெள்ளக்கலைச்சடைக்கோடீச்சுரேசர்சிலம்பிடையென்
னுள்ளக்கமலத்துறைதிருவேயிவ்வுலகஞ்சுற்றும்
வெள்ளக்கடற்குக்கரையுண்டளவுண்டுமேவுமிந்தக்
கள்ளக்களிப்பெருங்காமக்கடற்கரைகண்டிலனே. (௱௮௯)

புகழ்தல்.

வெண்பொடிப்பூசத்தாதிரையார்மகமேலழித்தோர்
பெண்புணரத்தத்தர்கோடீச்சுரத்திந்தப்பெண்ணிகர்யா

றொன்பயினுகமடந்தையர்தாழ்ந்தவரோத்திமையோர்
கண்புறுமாதர்களந்தரத்தோர்மண்ணினணிலரோ, (௱௬௰)

இறைவியிறைவனைக்குறிவரல்விலக்கல்.

உள்ளன்புணர்ந்தருள்கோடீச்சுரேசர்தபோங்கலன்ப
கள்ளம்பெரிதுகராம்பெரிதாற்றிற்கவலைநெறி
வள்ளம்புதூர்ப்பர்வனசரர்நீதனிவாரல்வரு
வெள்ளங்கிணற்றுப்புனல்கொண்டுபோதலின்மேதினிக்கே. (௱௬௧)

தலைவன்றலைவியையில்வயின்விடுத்தல்.

எனையாளவந்ததிருவேதனிநில்லலேதில்வண்டர்
டனையார்கள்ளுண்டுகளித்துத்திரியுமிப்பைம்பொழிற்கண்
வனையாறுறசடைக்கோடீச்சுரவள்ளல்வண்சிலம்பி
லனையாங்குநின்றனைத்தேடுமுன்னேகிடலர்மனைககே. (௱௬௨)

பாங்கிதலைவியையெய்திக்கையுறைகாட்டல்.

சலந்தரற்காய்ந்தவர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பின்
னலந்தருவேள்விழிமானேதளவமலர்கொணர்ந்தே
னலந்தரமீதுனனைகையெழினோக்கிமுன்னுணமுற்று
மலர்ந்திடல்போலுள்ளுடைந்தாங்குநின்றதுவாய்திறந்தே (௱௬௩)

பாங்கிதலைமகளையிற்கொண்டேகல்.

தாய்துயினீங்கினென்றுமெங்கெனுமதுதானுமன்றி
வாய்துணைவாரியடைப்பினுங்கூவிடவாயிலைநம்
மேய்துதிகொண்டருள்கோடீச்சுரேசரிமையவெற்பி
லாய்துடிநேரிடையாயொல்லைவாபின்னகந்தனக்கே. (௱௬௪)

பாங்கியிறைவனைவரவுவிலக்கல்.

மாயாவினோதர்தென்கோடீச்சுரேசர்வரையிறைவ
சாயாவனமுங்கழிப்பாலையுந்தள்ளிச்சாரினுமித்
தியார்குறிஞ்சியிற்சாரவொண்ணாதுதெரிக்குமிவை
யாயாதிரவில்வரினீயெனக்காமரும்பழியே. (௱௬௫)

தலைமகன்மயங்கல்.

காவென்றுரைக்குமுன்வாவென்றழைத்துக்கதியருளுந்
தேவென்றுனாசியன்கோடீச்சுரவள்ளல்செஞ்சிலம்பிற்
போவென்பதேபுகலின்றொருபுயல்போற்றதன்மேற்
றுவெண்மதிக்கதிரன்னாள்சுகமாஞ்சகோரமதே. (௱௬௬)

தோழிதலைமகடேயார்இளந்துவிடுத்தல்.

அரவிடையீசர்தென்கோடீச்சுரவெற்பவண்ணூமிவ்
விரவிடைவிண்ணெலிகேளாமகிழ்மயிலென்னவெமமா
னிரலருங்கான்கடந்தன்னூரணைந்தபின்னீகுறிக்கு
மிரலைதன்வாயொலிகேட்டபின்றான்களிப்பெய்துவதே (௱௬௭)

திருமகட்புணர்ந்தவன்சேறல்.

பொன்னூறழ்மெய்யரன்கோடீச்சுரமன்னபூங்கொடிதரு
னூன்னுமிடையல்குலாகநேமைமயோதுகென
மின்னுமரவுமதியுமங்கக்குவெளியுறவென்
முன்னுறவெய்திநெறிகாட்டநான்செல்வன்மொய்குழலே. (௱௬அ)

இறைவிக்கிகுளையிறைவரவுணர்த்தல்.

இலகம்புனைசடைக்கோடீச்சுரவள்ளலேமவெற்பிற்
கலகம்புரிவடிவேல்விழியாய்நந்தங்காவினிடை
யுலகம்புரக்குமுன்மேகம்வந்தெய்தியதோதலுறு
நலகம்பலைசெவிக்கேட்கலுற்றேனிங்குநண்ணலுற்றே. (௱௬௯)

தான்குறிமருண்டனமதலைவியவட்குரைத்தல்.

வெள்ளங்கொள்வேணியர்கோடீச்சுரவன்பர்மேவுறச்செய்
கள்ளங்கொளோதையெனவேற்றொலியினைக்காவடைந்தேன்
கிள்ளையினங்கள்சுகமாயிருந்தனகேகயமென்
னுள்ளமருளமுற்றேகையதாயங்குறைவுற்றதே. (௨௱)

பாங்கிதலைவன்றீங்கெடுத்தியம்பல்.

கார்மேவியகண்டர்கோடீச்சுரவன்பாகாவினிடை
வார்மேவியகொங்கைநீபோயடிக்கடிமாழ்கிவர
நீர்மேலெழுதிவைத்தேகினராகுறினைகுறிவை
யார்மேலறியவல்லாரவர்மாயமுமார்வமுமே. (௨௱க)

தலைவன்புலந்துபோதல்

மின்செயுஞ்சூலத்தர்கோடீச்சுரநம்பர்வெற்பினினி
யென்செய்வமென்னவிரங்குநெஞ்சேயிவ்விடையிரவிற்
றென்செயம்போருகச்செந்தேனமக்குத்தெரிவுறுமோர்
கின்செய்கையாலுமலைத்தேனலைத்தாய்கெடிதேனையே. (௨௱௨)

புலர்ந்தபின்றலைவிவறுங்களங்கண்டிரங்கல்,

பொன்னாகமால்புகழ்கோடீச்சுரேசர்புகார்த்துறைவாய்ப்
புன்னாகமேவியபுள்ளினங்காளன்பர்புல்லிரவின்
முன்னாகவின்குற்றனரோவெனக்குமொழிமினின்றிப்
பின்னாகமேவிலவர்க்குரைப்பீரென்பெருந்துயரே. (௨௱௩)

தலைவிபாங்கிக்குரைத்தல்.

நெய்யார்மழுவினர்கோடீச்சுரவெற்பர்நென்னல்வரை
பொய்யாரெனப்பொருண்மாறுகொண்டேனவர்போற்றிடுமின்
றுய்யானமெய்துவனென்றுசொன்மாறுரைத்துற்றவப்பேர்
மெய்யாயுடன்படச்செய்துகொண்டார்மதிமெல்லியலே, (௨௱௪)

தலைமகளவலம்பாங்கிதணித்தல்.

தகரக்குழல்பங்கர்கோடீச்சுரநம்பர்சய்யநெடுஞ்
சிகரத்துதித்தநதியின்பின்னேகியசேமலரை
வகரமுன்மேவுங்குளத்திடைநோக்கினன்வண்பொழிற்கட்
பகரணியார்முலைமாதேதவிர்நின்பருவரலே. (௨௱௫)

சிகரத்துதித்துவருகின்றநதி-காவிரி-இதிற்பின்னேகியதுகாவி
வகரமுன் மேவுகுளம், வகுளம்-அதுமகிழ மரம்.

இறைவன்மேற்பாங்கிகுறிபிழைப்பேற்றல்.

தாரார்கடுக்கையர்கோடீச்சுரேசர்தடஞ்சிலம்பிற்
கூரார்மணிவேற்கரத்தீர்நெருநற்குறியிடத்து
வாராதிருந்தீருமதூர்க்குநாங்கள்வரக்குறித்தே
மூரார்பெயருநும்பேரும்விள்ளாமையினுற்றிலமே. (௨௱௬)

இறைவிமேலிறைவன்குறிபிழைப்பேற்றல்.

என்னைமுன்னாண்டருள்கோடீச்சுரவள்ளலேமவெற்பின்
மின்னையன்னாள்வடிவென்றுங்குயிலிசைமேவுமென்சொற்
றன்னையன்னாண்மொழியென்றுமற்றங்கங்குச்சார்ந்திட்டுங்கள்
பொன்னையிரும்பொழிற்காண்கிலனூர்சென்றுபோந்தனனே. (௨௱௭)

தலைவிகுறிமருண்டமைபாங்கிதலைவற்குரைத்தல்.

நீலுண்டகண்டத்தர்கோடீச்சுரேசர்நெடுஞ்சிலம்பி
னேலும்புளினஞ்சிலம்பினுந்தாருவிழைந்திடினு

மேலுங்குறிவேற்றுமையறிபாள்சென்றுமீண்டுபின்போய்
காலுஞ்சிவந்திட்டதல்வழிக்காவலகன்னிகைக்கே (௨௱௮)

அவன்மொழிக்கொடுமைபாங்கியவட்குரைத்தல்.

கங்கைச்சடையினர்கோடீச்சுரேசர்கயிலையிலா
சங்கைக்கிடமிலெஞ்சங்கேதநதேருந்தகையற்றிந்த
மங்கைப்பருவமுதலாயதுங்கணமடவரற்கென்
றங்கைத்தலத்தெளிர்வேலர்சொன்னார்வந்தணியிழையே. (௨௱௯)

என்பிழைப்பன்றென்றிறைவிநோதல்

மறக்குஞ்சரமுரிகோடீச்சுரேசர்வரையளிகள்
பறக்குமிசையுஞ்சருகோடலருதிர்பாட்டியலு
முறக்கும்பிடா திருந்தொண்பொழில்வாய்க்கேட்டுரைக்குமவர்
சிறக்குங்குறியென்றலைந்தேனிருளிடைத்தேமொழியே. (௨௱௰)

தாய்துஞ்சாமை.

வணங்கார்புரம்வென்றகோடீச்சுரேசனைவாழ்த்தினி
திணங்காகுமிந்தப்பிறப்பிடையேபண்ணிசைவரிபின்
கணங்காமுறுகருங்கூந்தன்மின்னேயன்னைகண்ணிமையா
துணங்காயினளிரவெல்லாந்தனியேனணங்குறவே (௨௱௰௧)

நாய்துஞ்சாமை

வீயுறங்கும்பொழிற்கோடீச்சுரநம்விமலர்வெற்பிற்
பேயுறங்காதங்கதனுடன்றாய்துயில்பெற்றிடினும்
நாயுறங்காதன்னதன்கணுறங்கினுநாமெதன்
வாயுறங்காதிவற்றண்ணலெவ்வாறுவருமிரவே. (௨௱௰௨)

ஊர்துஞ்சாமை.

மருக்கொண்டகொன்றையர்கோடீச்சுரேசர்வரையிடத்திற்
குருக்கொண்டவொண்டொடிப்பைங்கிளியேயென்கொடுமையிருட்
கருக்கொண்டுநீடுவிழாவொடுகூத்துக்கதைகளென
வுருக்கொண்டுவந்திந்தவூருறங்காமலுஞற்றியதே. (௨௱௰௩)

காவலர்கடுகுதல்.

நாவலர்போற்றிடுங்கோடீச்சுரேசர்நளிர்வரைக்க
ணேவலரான்மதன்றாக்கமெய்வாடுநம்மேந்தலுக்கு
மேவலராகித்துடியடித்தார்த்துவிடிவளவுங்
காவலர்சூழலின்வாரானிச்சூழலிற்காலனுமே. (௨௱௰௪)

நிலவுவெளிப்படவருந்தல்.

சுரும்பார்மலர்ச்சடைக்கோடீச்சுரேசர்சுடர்க்கிரிமே
லரும்பாமுலைக்கொடியன்பரென்பாலவந்தகலளவும
வரும்பாழ்மதியைப்புதைத்தாங்குவைத்திடவல்லவரார்
கரும்பாந்தளொன்றுளதந்தவெட்டுண்டதைக்கண்டிலனே. (௨௱௰௫)

கூகைகுழறுதல்.

மூரண்டருவேலார்க்கியல்கவ்வரியின்மொழியையரு
மிரண்டுடன்முன்னதற்கஞ்சாரேருடொன்பதினாதல்வெண்ணெய்
திரண்டுறுவேலையிற்றுழிச்சினைதவொக்குஞ்செய்ங்கையா
லரண்டுகளாக்கிறைகோடீச்சுரமன்னவாயிழையே. (௨௱௰௬)

கவ்வரியினிரண்டு-கா-முன்னது-க-காகத்துக்கஞ்சுகின்ற,கூக-கூகை.

கோழிகுரற்காட்டுதல்.

வடியேர்கொள்வேலொடுசேய்போலிறைவர்வருதல்கண்டு
கொடியேனிவ்வூரிடையுள்ளேனென்கின்றதுகோழியிந்தப்
படியேயெனக்கிகலாயிங்கிருவெனப்பன்னிச்செல்வார்
துடியேரிடையவர்கோடீச்சுரநம்பர்தூய்வரைக்கே, (௨௱௰௭)

பாங்கிதலைவியைப்பருவரல்வினாதல்,

மகஞ்செயுமோமப்புகைபோய்விசும்பின்மழைபெய்வித்துச்
சகஞ்சலிபாமம்செய்கோடீச்சுரவள்ளல்சாரலிலுன்
னகஞ்சலிப்புற்றதென்றோரென்னவோதினரன்னைதநின்
முகஞ்சிறிதோதிற்றுநீசிறிதோதுமுகிழ்முலையே. (௨௱௰௮)

தலைவியருமறைசெவிலியறிந்தமைகூறல்.

கயலையுமவேலையுநேர்விழியீரன்னைகாவுடனே
வயலையுஞ்சூழநங்கோடீச்சுரநம்பர்மால்வரையென்
செயலையுநீர்கொண்டசேலையுமாகக்கிளைத்தெழுந்த
பயலையும்பார்த்தெவனென்றுண்மிகவும்பயந்தனனே. (௨௱௰௯)

நீர்கொண்டசேலை-நீர்துளிக்கின்றசேல்போன்றகண்ணை,பயலை-பசலை

தலைவிதலைவன்வருந்தொழிற்கருமைசாற்றல்.

கொங்கலர்க்கோதைநங்கோடீச்சுரேசர்குவட்டினிடைத்
திங்களோரம்புலிகோழியோர்வாரணஞ்சேண்பொழிலிற்
றங்குங்குடிஞையோர்கோட்டானிசைந்திடுஞ்சாரிவரை
யெங்குக்கடந்தன்பரெவ்வாறணைகுவரிவ்விடத்தே. (௨௱௨௰)

தலைவி தலைமகனூர்க்குச் செலவொருப்படுதல்.

மேனூர்மதிச்சடைக்கோடீச்சுரவள்ளல்வெற்பரென்றன்
மானூர்மனத்தினைக்கொண்டகன்றாரைநவாங்கிவரக்
கானூர்தருகின்றதுசெல்லுவோமெனிநகண்ணுதல்வாழ்
நானூரென்னூரென்றணங்கேயவர்முன்னவின்றனரே. (௨௨௧)

பாங்கியிறைவனைப்பழித்தல்.

சீரலர்செங்கையிற்சென்னியுந்தாண்மேற்றெறிக்குமெழி
லோரலர்க்கண்ணுங்கொள்கோடீச்சுரவள்ளலோங்கலினும்
வாரலர்க்கோதைவளவரென்றெண்ணியவன்னரிங்குச்
சேரலரானதிற்கைதவராவர்தெளிவுறினே. (௨௨௨)

இறைவனைத்தலைவியியற்படமொழிதல்.

[illegible]ாயாயுலகிற்குத் [illegible]யுமாடருள்சங்கரர்செவ்
வாயார்மறையினர்கோடீச்சுரமன்னமாதிறைவர்
நீயாரென்றேறுதிடலோராதவரல்லர்தெண்மதியா
ராயாதிருப்[illegible]தெளிவியன்றுயபொன்னருவினையே. (௨௨௩)

தலைவிகனவுநலிவுரைத்தல்.

பெண்ணுருபாகத்தர்கோடீச்சுரவெற்பர்பேசரவி
னண்ணியுரம்பெறுசாளங்கைக்கொண்டுகைமுகமுற்
றுண்ணயப்பெய்துறவாடிடவாவெனவோதினர்நான்
கண்ணைவிழித்தங்கெழுந்தேனவர்தமைக்கண்டிலனே. (௨௨௪)

தலைவிகவினழிவுரைத்தல்.

நங்காய்நங்காவலரூரினிலாத்திறநன்கறிந்து
கொங்காரும்வேடன்படைதனியேன்பொற்குவைகளெலா
மிங்காவலினுற்றுச்சூறையிட்டோடிற்றிமையமங்கை
பங்காளரங்கணர்கோடீச்சுரேசர்பணிவளைக்கே. (௨௨௫)

கொங்கு-தாது. வேடன்படை-மதன்கணை.

பொற்குவை-அழகின்குவை.

தன்றுயர்தலைவற்குணர்த்தல்வேண்டல்.

அங்காவியங்கண்ணிகோடீச்சுரவள்ளலன்பர்முன்போ
யெங்காரிகைபொன்னிறமேற்றுமா[illegible]

